

ஸ்ரீநகரம்

ஸ்ரீமாமேரு தியான நிலையம்

# ஸ்ரீசக்ர மகாமேரு வழிபாட்டு முறை

ஸ்ரீமாமேரு தியானநிலையம், ஸ்ரீநகரம்





வெளியிடுவோர் :

ஸ்ரீமாமேரு டிரஸ்ட்

சென்னை - 600 01



ஸ்ரீமாமேரு தியான நிலையத்திற்குக் கும்பாபிஷேகம்



காஞ்சி ஆச்சாரியார் திரு. ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகள், தியான நிலைய வழிபாட்டு நூலைப் பார்வையிடுகிறார்.



திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகள்

பண்ருட்டி கண்டிகை - ஸ்ரீநகரில்
அமைந்துள்ள

# ஸ்ரீமாமேரு தியான நிலயத்தில்

எழுந்தருளியிருக்கும்

ஸ்ரீ மஹா மேரு மற்றும் அதன்
பிந்துத் திரிகோணத்தில் நின்று விளங்கும்

ஸ்ரீ
திதி நித்யா தேவிகள், மற்றும் 'சியாமளா'
'வாராஹி' வழிபாட்டுக்கிரமம் பலன்கள் மற்றும் ஸ்ரீலலிதா
ஸஹஸ்ரநாமம் ஸ்ரீலலிதா த்ரிசதி, கட்கமாலா,
ஸ்ரீலலிதா அஷ்டோத்திரம் நாமாவளிகளுடன்

பதிப்பாசிரியர் :
அரிமா எம். ஹரிராம்
தொகுப்பாசிரியர் :
அருளிசைக் கவிச் செல்வர்
கவிமாமணி. அ. தமிழ்மாறன்

வெளியிடுவோர் :
ஸ்ரீசக்ரமேரு ஸ்தாபனாச்சாரிய
சுவாமிஜி ஸ்ரீமுருகபூஷணம்
நிறுவன அறங்காவலர்
ஸ்ரீமாமேரு டிரஸ்ட், 4, ஹனுமந்தா சாலை
பாலாஜி நகர், சென்னை - 14 இராயப்பேட்டை
போன் : 8261254

| | | |
|---|---|---|
| முதற் பதிப்பு | : | ஜூன் 1993 |
| இரண்டாம் பதிப்பு | : | செப் 1993 |
| மூன்றாம் பதிப்பு | : | 1995 |
| நான்காம் பதிப்பு | : | அக். 1997 |



| | | |
|---|---|---|
| பதிப்பாசிரியர் | : | லயன் எம். ஹரிராம் |
| தொகுப்பாசிரியர் | : | கவிமாமணி தமிழ்மாறன் |

விலை ரூ. 20.00

நூல்கிடைக்குமிடம் : ஸ்ரீமாமேரு தியான நிலையம்
ஸ்ரீநகரம், கண்டிகை
ஸ்ரீமாமேரு டிரஸ்ட்
4, அனுமந்தா சாலை
பாலாஜி நகர், ராயப்பேட்டை
சென்னை - 600 014.
போன் : 8261254

நவசக்தி நிலையம்
153, லாயிட்ஸ் சாலை,
கோபாலபுரம், சென்னை - 600 086.
போன் : 8272013

Printed at

**மெர்குரி கிராபிக் பிரிண்ட்ஸ்,** சென்னை - 2.
போன் : 8586715, 8544953

ஸ்ரீமாமேரு தியான நிலையம்
(சென்னை - தாம்பரம் - படப்பை - காஞ்சிபுரம்
நெடுஞ்சாலையில்)

# ஸ்ரீ மகாமேரு ஸ்ரீ சக்கர பூஜை

பண்ருட்டிகண்டிகை கிராமத்திலுள்ள ஸ்ரீ நகரத்தில் அமைந்திருக்கும் ஸ்ரீ மாமேரு தியான நிலையத்தில், ஸ்ரீமகாமேருவும், மற்றும் 18 ஸ்ரீ நித்யாதேவி வாராஹி, மாதங்கிக்குரிய சக்கரங்களும் பிரதிஷ்டை செய்யப்பட்டு, 1993ம் ஆண்டு ஜூலை முதல் தேதி ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம் ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள் அருளாசியுடன் கும்பாபிஷேகம் நடைபெற்றது. இங்கு அமைந்துள்ள ஸ்ரீ லலிதா மகாதிரிபுர சுந்தரி, 'மகா மேரு' உருவில் வழிபாடு செய்யப்படுகிறது. இந்த பிரபஞ்சத்தின் முதன்மைத் தெய்வமான ஸ்ரீ மகாதிரிபுரசுந்தரி லலிதா பராபட்டாரிகாவின் மிக உயர்ந்த வழிபாடே ஸ்ரீ சக்ர மகாமேரு பூஜையாகும்.

கி.பி. 2ம் /3ம் நூற்றாண்டுகளில் வாழ்ந்த மகான் ஸ்ரீ ஆதிசங்கர பகவத் பாதாள் அவர்களால் ஸ்ரீவித்யா பூஜை மக்களுக்கு முதலில், முறையாக உபதேசிக்கப்பட்டது.

ஒவ்வொரு சாதகனும், ஐம்புலன்களைக் கட்டுப்படுத்தி, மன ஒருமைப்பாட்டுடனும் இந்தப் பூஜையை, அவரவர் முறையில் செய்து வந்தால்தான் சிறந்த பலனை அடையமுடியும்.

நல்லொழுக்கம், நன்னடைத்தை, புலன்கட்டுப்பாடு, தெளிவான சிந்தனை, மன ஒருமைப்பாடு இவைகளைச் சாதகன் கைக்கொண்டு, ஸ்ரீ சக்ர மகாமேரு பூஜையைச் செய்து வந்தால், குடும்ப நன்மையும், உலக க்ஷேமமும், கைகூடி, மறுபிறவியில்லாத உயர்நிலையையும் தருவது என்று ஸ்ரீஹயக்ரீவர், ஸ்ரீவித்யாரண்யர் மற்றும் ஸ்ரீ ஆனந்த பைரவர் போன்ற சான்றோர்கள் இந்த பூஜையைப் பற்றி விரிவாகக் கூறியிருக்கிறார்கள்.

லயக்ரமத்தில் ஸ்ரீசக்கரத்தில் பிந்துஸ்தானத்தில் பூஜை செய்வதால், தேகபலமும், ஆரோக்கியமும், மனத்திருப்தியும், கிடைப்பதோடு உலகியல் ஆசைகளிலிருந்து தடுத்து சாதகனை அது காக்கிறது. ஸ்ரீ பாஸ்கரராயரின் "வரிவஸ்யா ரகஸ்யம்", ஸர்ஜான் உட்ரா ஃப் எழுதிய "சர்பெண்ட் பவர் ஆஃப் குண்டலினி சக்தி" மற்றும் ஸ்ரீ வித்யார்ணவ தந்திரம், ஸ்ரீ வித்யா தந்திரராஜ தந்திரம், ஸ்ரீஷோடஸிகாக் நவதந்திரம்" போன்ற நூல்களை நாம் விரிவாகப் பயின்று ஸ்ரீவித்யா தந்திரத்தைப் பற்றி முற்றிலும் அறிந்து கொள்ளலாம். பிந்துஸ்தானத்தில், ரக்த சரணம், சுக்ல சரணம், பிரபா மிஸ்ர சரணம், நிர்வாண சரணம், விமர்ச சரணம், மகாபிரகூச சரணம் என்று ஆறு விதமாகச் சொல்லப்படும் அம்பாளின் பாதகமலங்களைப் பூஜிக்க வேண்டும். உலக நன்மை, குடும்ப நன்மையிலிருந்து, மகாசமாதி நிலை வரை இவ்வுடலிலேயே பெற்று ஆனந்த நிலை எய்தவும் இது உதவுகிறது.

பூஜை முறைகள் இருவகையாகப் பிரிக்கப்பட்டுள்ளன. ஒன்று அந்தர்முக பூஜை என்ற மானசீக பூஜை. மற்றொன்று பகிர்பூஜை என்று அழைக்கப்படும் ஸ்ரீசக்ர மகாமேரு பூஜை; முன் காலங்களில் மக்கள், முதலில் "அந்தர் பூஜையை" செய்துவிட்டு, பிறகு "பகிர்பூஜை செய்வது வழக்கமாக இருந்து வந்தது. ஆனால் தற்காலத்தில் அவ்வாறு பூஜை செய்ய, நேரம் இல்லாமையால் இரண்டையும் ஒரே சமயத்தில் செய்து விடலாம். நமது உடலில் ஆறு சக்கரங்கள் உள்ளன; நமது உடலில் ஆறு நிலைகளிலிருந்து குண்டலினி சக்தி எழும்ப இவை உதவுகின்றன. ஆனால் ஸர் ஜான் உட்ராஃப், இதை இன்னும் விரிவாக்கி, நமது உடலில் 15 சக்கரஸ்தானங்கள் உள்ளன என்று தெரிவிக்கிறார். அதன் விவரங்களை அவரது "சர்பெண்ட் பவர்" என்ற நூலில் விளக்கமாகக் கூறுவதோடு பூஜா முறைகளையும்கூறியுள்ளார். ஸ்ரீவித்யா பூஜைமார்க்கங்களின் இரு பிரிவான சமயாசாரம், வாமாசாரம் ஆகியவற்றில், சமயாசாரமே சிறந்ததாகும். வாமாசாரம் கத்திமேல் நடப்பது போல என்று கூறுவர் - ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸர் போன்ற மகான்கள். வாமாச்சாரத்தில் ஸ்ரீசக்ர பூஜை

அப்பிரத க்ஷிணமாகவும், சமயாசாரத்தில் பிரதிக்ஷிணமாகவும் செய்யப்படுகிறது. சமயாச்சாரத்தில் எப்போதும் நல்ல பலன்களே ஏற்படுவதும், வாமாச்சாரத்தில் தீய விளைவுகளும் ஏற்படக்கூடிய சாத்யக் கூறுகள் அதிகமாகவும் உள்ளதென, ஸ்ரீவித்யா சாஸ்திர வல்லுநர்கள் கூறுகிறார்கள். ஆகவே 'வாமாசார' வழிபாட்டை விலக்குதலே தக்கது.

பூஜை செய்யும்போது வடக்கு முகமாக அமர்ந்து பூஜை செய்ய வேண்டும்.

ஸ்ரீ மகாமேருவும், ஸ்ரீசக்ரமும் ஒன்றுதான். ஸ்ரீமகாமேருவின் வரைபடம்தான் - ஸ்ரீசக்கரம், சம சதுர வடிவத்தில் அமைந்துள்ள இந்த **ஸ்ரீசக்கரத்தையும், ஸ்ரீமகா மேருவையும்** - எவரும் பக்தியுடன் பூஜை செய்யலாம். ஒரு சின்ன விதி மட்டும் உண்டு; ஐந்து கோணமுள்ள சக்தி கோணத்தை கிருஹஸ்த சாதகர்கள் தம்மை பார்க்கும்படி வைத்துக் கொண்டு பூஜை செய்யவேண்டும். ஸ்ரீ சக்ர மகாமேரு பூஜை சாதகனுக்கு இவ்வுலகில், குடும்பத்திற்கும் தனக்கும் எல்லாவிதமான சௌபாக்கியம் சுகங்களைத் தருகிறது.

இல்லறத்தில் ஈடுபடாத துறவிகள், நான்கு கோணங்கள் கொண்ட சிவகோணத்தைத் தங்களைப் பார்க்கும்படி வைத்துக் கொண்டு மிகுந்த அந்தரங்க சுத்தியோடும், உடல் மன ஒருமைப்பாட்டுடன் பூஜை செய்தல் வேண்டும். இந்த பூஜையினால் உலக க்ஷேமம் ஏற்படுவதோடு, சாதகருக்கு (துறவி) தனது பிறவிப் பிணி அகன்று அத்வைத சித்தியாகிய ஜீவன் முக்தியையும் முடிவில்பெற்றுத் தருகிறது.

முதல் ஆவரணமான "**த்ரைலோக்கிய மோகன சக்ரத்தில்** வழிபடுவதால், மூவுலகும் நமது வசப்படும். அப்படி வசப்படும் என்றால், மனிதன் மீண்டும் மீண்டும் தவறுகள் செய்து, உலகியலில் ஈடுபட்டு, பிறவி பல எடுக்க வேண்டும் என்றால் இல்லை. இதன் உண்மையான பொருள் என்ன என்றால், பூவுலகிலுள்ள பக்தர்கள், சாதகர்களின் மீது பொறாமை கொண்டவர்கள் - மற்றைய பாதாள தேவ, லோகங்களிலி

ருக்கிறார்கள். இவர்கள் துருவன், விசுவாமித்திரர் போன்ற மானிடரின் தவங்களைக் கலைக்க முற்படவில்லையா? அதுபோல், நமது பூஜைகளையும், தியானத்தையும், வேறு எவராலும் கலைக்க முடியாத சக்தியை நமக்கு இந்த முதல் ஆவரண பூஜை தருகிறது என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும். இந்த சக்கரத்தின் முதல் ரேகையில் அஷ்டமாசித்திகளும், இரண்டாவது ரேகையில் ப்ராஹ்மி முதல் மகாலட்சுமி வரை அஷ்டமாதாக்களும், மூன்றாவது ரேகையில் பத்து முத்ராதேவிகள் : சர்வ ஸம்க்ஷோபிணி முதல் சர்வதிரிகண்டா வரை அமர்ந்துள்ளார்கள். இந்த ஆவரண பூஜையினால் சாதகன் மகா பெரிய சக்திகளை அடைகிறான். பிராம்மி அவனது நினைவாற்றலைப் பெருக்குகிறாள். கௌமாரி ஆளுமையைத் தருகிறாள். மகாலட்சுமி செல்வத்தை வழங்குகிறாள். மகேஸ்வரி நாம் நினைப்பது அனைத்தும் நடத்தித் தருகிறாள். மூன்றவாது ரேகையிலிருக்கும் சர்வமஹாங்குசாதேவி, பூஜையின் போது சலனப்படும் மனதைத் திடப்படுத்தி பூஜையில் ஒன்றும்படி செய்கிறாள். பூப்பிரஸ்தாரமான இந்த ஆவரணத்தின் கிரகம் வியாழன், இவர் பூஜை செய்யும் ஆண்களுக்குப் - பெண்கள் உதவியாக இருக்கும்படி செய்கிறார். மேற்படி பூஜை முறைகளை பாஸ்கரராய புரத்தில் வாழ்ந்து மறைந்த ஸ்ரீபாஸ்கரராயர் விரிவாக எழுதியிருக்கிறார். ஸ்ரீவித்யா தந்த்ரம், தந்திரராஜதந்திரம், ஆனந்த பைரவ தந்திரம் ஆகிய தந்திர நூல்கள் சாதகருக்கு மிகவும் உதவும். மகாமேரு - ஸ்ரீ சக்கரத்திலுள்ள எல்லா தேவதைகளுமே, ஸ்ரீ லலிதா மகாதிரிபுர சுந்தரி பராபட்டாரிகாவின் அம்சமூர்தங்களே என்று இந்த நூல்கள் தெளிவுடுபடுத்துகின்றன.

அடுத்துவரும் இரண்டாவது ஆவரணத்தில், பதினாறு இதழ் கமல ரூபத்தில் காமாகர்ஷிணி முதல் சரீராகர்ஷணீ வரை 16 யோகினிகள் வாசம் செய்து உலகை ரக்ஷிக்கிறார்கள். இவை சாதகரின் தீய எண்ணங்களை மனசிலிருந்து அகற்றி, சத்புத்தியைத் தருகின்றன. **சர்வாஸா பரிபூரகம்** என்பது இந்த ஆவரணத்தின் பெயராகும்.

எட்டுத்தளங்களைக் கொண்ட தாமரை வடிவில் அமைந்துள்ள இந்த மூன்றாவது ஆவரணத்தின் பெயர் - "**ஸ்ர்வஸம்க்ஷோபணம்,**" மன்மதனின் சக்தியை முறியடிக்கவும், சாதகன் காமாதி இச்சைகளிலிருந்து முற்றிலும் விடுபட்டு தேவி பூஜை, மற்றும் தியானம் இவற்றில் ஈடுபட இந்த ஆவரண தேவதைகள் உதவுகின்றன.

நான்காவதாக உள்ள ஆவரணம் - "**ஸர்வ சௌபாக்ய தாயகம்**" என்று வழங்கப்படு;ம. சந்திரன் வடிவிலே இங்குள்ள தேவி, சாதகனுக்கு உலகியலில் உள்ள எல்லா சுகங்களையும் - புத்திரர் பேறு, செல்வம் என்று சகல சௌபாக்யங்களையும் தந்து ஆன்மாவையும் விடுதலை செய்து முடிவில் தன்னடியில் சேர்த்துக் கொள்கிறாள்.. ஸர்வவஸம்க்ஷோபிணி முதல் ஸர்வத்வந்த் வக்ஷயங்கரி வரை 14 யோகினிகள் இங்கு வாசம்.

ஐந்தாவது - "ஸர்வார்த்த ஸாதகம்" என்கிற சக்கரம் ஸர்வ ஸித்திப்ரதா முதல் சர்வஸௌபாக்யதாயினி வரை பத்து யோகினிகள், இந்த ஆவரணத்தில் ப்ரசன்னமாயிருக்கிறார்கள். மஸ்த்தியாவதாரம் முதல் கல்கி அவதாரம் வரையுள்ள திருமாலின் 10 அவதாரங்களுமே இந்த ஆவரணதத்தில் நிலை பெற்றுள்ளது. தேவியம்சமான கிரகம் - சனிபகவான், அம்பாளின் பத்து விரல்களின் நகக்கணுவிலிருந்து மஹாவிஷ்ணுவின் 10 அவதாரங்கள். நிகழ்ந்ததாக ஸ்ரீ லலிதாஸஹஸ்ர நாமத்தில் குறிப்பிடப்படுகிறது. சாதகனுக்கு தேக, மனோ, ஆத்ம பலங்களைத் தந்து மோட்சம் அடைவதற்கும் துணை செய்கிறது.

ஆறாவது ஆவரணம் : "**ஸர்வரக்ஷாகரம்**", தேவி இங்கே சூரியன் ரூபமாக காட்சி தருகிறாள். ஸர்வக்ஞா முதல் ஸர்வேப்ஸித **பலப்ரதா ஆகிய பத்து நிகர்ப்ப யோகினிகள் வாசம், சாதகனைத் துன்புறுத்தும் காம, குரோத, லோப, மோக, மத, மாச்சரிய மாதி, உட்பகைவர்களை வெல்லவும், தேசபக்தி, காந்தி, மனக்கட்டுப்பாடு பெறவும், பொறாமை, கர்வம் போன்ற தீய குணங்களினால் வரும் கேடுகளை நீக்கவும் இந்த ஆவரண பூஜை அவசியமாகிறது.**

ஏழாவது ஆவரணம் : "**ஸர்வ ரோகஹரம்**" எனப் பெரியது இந்த சக்கரத்தில் எட்டு வாக்கு தேவதைகள் ப்ரசன்னமாயுள்ளனர். புதன் இங்கே தேவி அம்சமாக வீற்றிருந்து, ஆன்ம ஞானம், அறிவு, பேச்சாற்றல் இவைகளை அளிக்கிறான். மனிதனின் மிகப்பெரிய நோயான பிறப்பு - இறப்பை இது போக்குகிறது. தேவியை ஸ்ரீலலிதா ஸஹஸ்ர நாமம் மூலம் பூஜை செய்யும் புத்தியை, வாக் தேவதைகள் - சாதகனுக்கு வழங்குகிறார்கள்.

எட்டாவது ஆவரணம் : "**ஸர்வஸித்திப்ரதம்**" - இந்த பூஜை மூலத்ரிகோணத்தில் செய்யப்படுவது. பாசம், அங்குசம், கரும்புவில், பாணம் ஆகிய அம்பாளின் 4 ஆயுதங்கள் இங்கே வழிபடப்படுகின்றன. தேவியிங்கு கேது வடிவில் இருக்கிறாள், மத்தியில், அண்டங்களை ஆட்டிப் படைக்கும் மஹாதிரிபுர சுந்தரி வீற்றிருக்கிறாள். வளைந்து நெளிந்து சலனப்படும் மனதை கரும்புவில் - தேவி வழிபாட்டில் நிலை நிறுத்துகிறது. பாணம், மன்மதனின் காம சக்தியை அழிக்கிறது. அங்குசம், தீமைகளை அகற்றி சாத்கரை நல்ல வழியில் செலுத்துவது, பாசம் - மனது உலகியல் கவர்ச்சிகளில் ஈடுபடாமல், அன்னை வழிபாட்டில் ஈடுபட வைப்பது.

ஒன்பதாவது ஆவரணம் : "**ஸர்வானந்தமய சக்கரம்**" எல்லா ஆனந்தங்களுக்கும் இருப்பிடமாக இருப்பதால் இதற்கு இந்தப் பெயர். காமேஸ்வரரும், காமேஸ்வரியும் அர்த்தநாரி ஸ்வரூபத்தில் விளங்குமிடமே இந்த பிந்து ஸ்தானம் என்கிற திரிகோணம் சாதகனுக்கு பேரின்பம் அளித்து, பிரும்ம நிலையில் ஒன்ற வைப்பது. நிர்விகல் பசமாதி என்ற நிலையுமிதுவே!

இந்தத் திரிகோணத்தைச் சுற்றிபதினாறு நித்யாதேவிகளும், ஸ்ரீசியாமளா, ஸ்ரீவாராஹி தேவிகளும் காத்து நிற்கிறார்கள்.

இதற்குமேல் 10 - வது ஆவரணம் ஒன்றும், துர்வாச மகரிஷியால் கூறப்பட்டது. ஷோடசி மற்றும் மஹாசோடசி மந்திர உபதேசம் பெற்றவர் மட்டுமே இந்த பூஜை செய்வதற்கு உரியர் குருவினால் சிரசில் "பூர்ணாபிஷேகம்" செய்யப்பட்ட சாதக

உபாசகர்கள் தான் இந்த ஆவரண பூஜை செய்வதற்குரியவர். மற்றவர் செய்யக் கூடாது என்பது கடுமையாக அனுஷ்டிக்கப்பட வலியுறுத்தப்படுகிறது. சாதகரின் எல்லா பாவங்களும் இந்த பூஜையினால் தொலைந்து போகின்றன.

சாதகர் ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம், ஸ்ரீ லலிதா அஷ்டோத்திரம், ஸ்ரீ லலிதா த்ரிசதி, ஸ்ரீகட்கமாலா முதலிய அர்ச்சனை மந்திரங்களை முறையாகச் செய்தல் வேண்டும். (சாதகரின் கௌகரியத்தை முன்னிட்டு இந்நூலின் பிற்பகுதியில் அவை சேர்க்கப்பட்டுள்ளன.) சாதகருக்கு பஞ்சதசி, ஸௌபாக்ய பஞ்சதசீ, பூர்ணாபிஷேகம், குருபாதுகாமந்திரம், தீக்ஷா நாமம் இவை மிகவும் அவசியமாகும்.

வாழ்நாளில் ஒரு முறையாவது 'நேப்பில்ஸ்' போக வேண்டும். என்று ஆங்கிலத்தில் ஒரு பழமொழி உண்டு. அதுபோல நாம் ஒவ்வொருவரும் ஒரு முறையாவது காஞ்சிபுரம் போகவேண்டும்; சிருங்கேரிபோக வேண்டும், அதுபோல் ஸ்ரீ நகரம் சென்று ஸ்ரீமகாமேரு அன்னையை வழிபட்டு பிறவிப் பயனை அடைய வேண்டும் என்று நாம் பிரார்த்திக்கிறோம்.



ஸ்ரீசக்ரம்



# ஸ்ரீ காமேஸ்வரி
## Sri Kamesware
## श्री कामेश्वरी

ஓம் காமேஸ்வரியை வித்மஹே! நித்யக்லின்னாயை
தீமஹி! தன்னோ நித்யா ப்ரசோதயாத்!!
குடும்ப சந்தோஷம், செல்வம்



# ஸ்ரீ பகமாலினி
# Sri Bhagamaline
# श्री भगमालिनी

ஓம் பகமாலின்யை வித்மஹே! ஸர்வ வசங்கர்யை தீமஹி! தன்னோ நித்யா ப்ரசோதயாத்!!

சுகப்பிரசவம்



# ஸ்ரீ நித்யக்லின்னா
# Sri Nithyakklinna
# श्री नित्यक्लिन्ना

ஓம் நித்யக்லின்னாயை வித்மஹே! நித்ய
மத்திரவாயை தீமஹி! தன்னோ நித்யா ப்ரசோதயாத்!!
தம்பதிகளின் சுமுக உறவு



# ஸ்ரீ பேருண்டா
## Sri Berunda
# श्री भेरुण्डा

ஓம் பேருண்டாயை வித்மஹே! விஷஹராயை தீமஹி!!
தன்னோ நித்யா ப்ரசோதயாத்!!
விஷக்கடி (மரண) முறிவு



# ஸ்ரீ வஹ்னிவாஸினி
# Sri Vahnivasene
# श्री वह्निवासिनी

ஓம் வஹ்னி வாசின்யை வித்மஹே! ஸித்திப்ரதாயை தீமஹி!! தன்னோ நித்யா ப்ரசோதயாத்!!

உலகியலில் மகிழ்ச்சி



# ஸ்ரீ மஹாவஜ்ரேஸ்வரி
# Sri Mahavajreswari
# श्री महावज्रेश्वरी

ஓம் மகா வஜ்ரேஸ்வர்யை வித்மஹே! வஜ்ரநித்யாயை தீமஹி! தன்னோ நித்யா ப்ரசோதயாத்!!

துன்பங்களிலிருந்து விடுதலை



# ஸ்ரீ சிவதூதி
# Sri Shevadoothi
# श्री शिवदूती

ஓம் சிவதூத்யை வித்மஹே! சிவங்கர்யை தீமஹி!
தன்னோ நித்யா ப்ரசோதயாத்!!
அதர்மத்தை அழித்தல்



# ஸ்ரீ த்வரிதா
# Sri Thvaritha
# श्री त्वरिता

ஓம் த்வரிதாயை வித்மஹே! மகா நித்யாயை தீமஹி!
தன்னோ நித்யா ப்ரசோதயாத்!!
கல்வி மற்றும் நீண்ட ஆயுள்



## ஸ்ரீ குலஸுந்தரீ
## Sri Kulasundare
## श्री कुलसुन्दरी

ஓம் குலசுந்தர்யை வித்மஹே! காமேஸ்வர்யை தீமஹி!
தன்னோ நித்யா ப்ரசோதயாத்!!
சொத்தும், செல்வமும்



# ஸ்ரீ நித்யா
# Sri Nithya
# श्री नित्या

ஓம் நித்ய பைரவ்யை வித்மஹே! நித்யா நித்யாயை தீமஹி! தன்னோ நித்யா ப்ரசோதயாத்!!

உடல்பலமும், சித்திகளும்



# ஸ்ரீ நீலபதாகா
# Sri Nelapathaka
# श्री नीलपताका

ஓம் நீலபதாகாயை வித்மஹே! மகா நித்யாயை
தீமஹி! தன்னோ நித்யா ப்ரசோதயாத்!!
தேர்வுகளிலும், பரீட்சைகளிலும் வெற்றி



# ஶ்ரீ விஜயா
# Sri Vijaya
# श्री विजया

ஓம் விஜயா தேவ்யை வித்மஹே! மஹே நித்யாயை
தீமஹி! தன்னோ நித்யா ப்ரசோதயாத்!!
தேர்தலிலும், கோர்ட்டு வழக்குகளிலும் வெற்றி



# ஸ்ரீ ஸர்வமங்களா
# Sri Sarvamangala
# श्री सर्वमङ्गला

ஓம் ஸ்வோம் ஓம் ஸர்வமங்களாயை வித்மஹே!
சந்த்திராத்மிகாயை தீமஹி! தன்னோ நித்யா
ப்ரசோதயாத்!!

விபத்தின்றி பயணத்தில் பாதுகாப்பு



# ஸ்ரீ ஜ்வாலா மாலினி
# Sri Jwala Maline
# श्री ज्वाला मालिनी

ஓம் ஜ்வாலா மாலின்யை வித்மஹே! மஹா ஜ்வாலாயை தீமஹி! தன்னோ நித்யா ப்ரசோதயாத்!!

பகைவர்கள நாசம்



# ஸ்ரீ சித்ரா
# Sri Chitra
# श्री चित्रा

ஓம் விசித்ராயை வித்மஹே! மஹா நித்யாயை தீமஹி!
தன்னோ நித்யா ப்ரசோதயாத்!!
திடீர் பணவரவு (லாட்டரி, குதிரை பந்தயம்
போன்றவை மூலம்)



# ஸ்ரீ லலிதா பரமேஸ்வரீ

## Sri Lalitha Parameswari

## श्री ललिता परपेश्वरी

ஓம் ஸ்ரீம் ஹ்ரீம் க்ளீம் ஐம்ஸௌ: ஓம் ஹ்ரீம் ஸ்ரீம் கஏஈ லஹ்ரீம்! ஹஸகஹலஹ்ரீம் ஸௌ ஐம் க்ளீம் ஹ்ரீம் ஸ்ரீம் ஓம்!

முக்தியும் உலகியல் நன்மைகளும்



# ஸ்ரீ வாராஹீ
# Sri Varahe
# श्री वाराही

ஓம் வாராஹ்யை வித்மஹே! ரத்னேஸ்வர்யை தீமஹி!
தன்னோ தேவி ப்ரசோதயாத்!!
பாம்புகடி மற்றும் பிராணிகளின் கடிவிஷ முறிவு
விபத்து தடுப்பு



# ஸ்ரீ சியாமளா
# Sri Shyamalā
# श्री श्यामळा

ஓம் மாதங்கின்யை வித்மஹே! ரத்னேஸ்வர்யை தீமஹி!
தன்னோ தேவி ப்ரசோதயாத்!!
கலை நுகர்ச்சி, பாட, நடிக்க,
பேச, நடனமிட - ஆற்றல் பெற

# ஓம் ஸ்ரீ மாத்ரே நம

அ) திதி நித்யா தேவிகளின் இருப்பிடமும் வழிபாட்டுக் கிரமமும்:

ஸ்ரீ மகாமேருவில் - சக்ரராஜம் என்று சொல்லப்படும் தேவியின் இருப்பிடமான பிந்துஸ்தானத்தைச் சுற்றியுள்ள திரிகோணத்தில், கோணத்திற்கு ஐவராக, பதினைந்து நித்யா தேவிகள் அமர்ந்துள்ளனர். தேவி பராசக்தி - 16 வது நித்யை: காமேஸ்வரி முதல் சித்ராவரை பதினைந்து நித்யா தேவிகள் இங்கே ப்ரசன்னமாயிருக்கிறார்கள். பதினைந்து திதிகளில் ஒவ்வொன்றிற்கு இவர்கள் பிரதி தேவதையாக விளங்குவர் - பிரதமை முதல், பௌர்ணமி வரையுள்ள சுக்லபக்ஷத்தில் காமேஸ்வரி முதல் சித்திராவரை திதிக்கு ஒருவராக, வரிசையாக வழிபடப்படுகிறார்கள். காமேஸ்வரி சுக்ல பட்சத்துப் பிரதமையின் தேவதை. பகமாலினி துவிதியையின் தேவதை. கிருஷ்ணபக்ஷத்து பிரதமை முதல் அமாவாசை வரைதலைகீழாக மாற்றி, சித்ரா என்ற நித்யா, கிருஷ்ணபக்ஷத்துப் பிரதமை திதியன்றும், ஜ்வாலாமாலினி துவிதியையன்றும், இப்படி மாற்று வரிசையில் வழிபடப்படுவார்கள்.

திரிபுர சுந்தரி (ஷோடசி) மகா மந்திரத்தில் 16 அட்சரங்கள் அடங்கியிருக்கின்றன. ஒவ்வொரு அக்ஷரமும் ஒரு நித்யாதேவி. இந்த 16வது கலைக்கு, மற்ற 15 கலைகளும் அங்க தேவதைகள் தேவியின் திருமுக மண்டலம் 16 கலைகளுடன் கூடிய பூர்ண சந்திரனைப் போல் ஒளிர்வது. ஸ்ரீலலிதாம்பிகா தேவியும், 16 நித்யைகளுடன் விளங்குகிறாள். இந்த திதி நித்யா தேவதைகள் மகா சக்தியும், பராக்கிரமமும் பொருந்தியவர்கள். தேவியின் ஆக்ஞையை நிறைவேற்றுவதில் கண்ணும் கருத்துமா யிருப்பவர்கள்.

பஞ்சதசாக்ஷரியிலுள்ள பதினைந்து பீஜங்களும், 15 நித்யைகளின் வாசகங்களாயிருப்பதால், பஞ்சதசாக்ஷரியும் திதி

நித்யயைகளும் ஒன்றே. ஒவ்வொரு நித்யையும் பகலில் பிரகாச சிவரூபமாகவும். இரவில் காளி நிறமுடைய சக்தியாகவும் விளங்குகிறாள்.

ஸ்ரீநகரத்தில், அமைந்துள்ள **ஸ்ரீமாமேரு தியான நிலையத்தில்**, ஸ்ரீமேருவுடன் கூட எழுந்தருளியுள்ள "நித்யா தேவிகளை" எவரொருவர் பக்தி சிரத்தையுடன் நாளொன்றுக்கு பதினாறு முறை வீதம் தொடர்ந்து 9 வாரங்களுக்கு வலம் வந்து வழிபடுகிறாரோ, அவருடைய சகல கஷ்டங்களும் தீர்ந்து, ஸ்ரீ நித்யா தேவிகளின் அருளினால், பரம சௌக்யத்தை அடைவார் என்பது மிகவும் உறுதியாகும். சாஸ்திரங்களில் குறிப்பிட்டுள்ளபடி ஸ்ரீவித்யா உபாசகர்கள் அனுஷ்டிக்கும் கிரமமான பூஜை முறைகளைச் செய்வதற்கு - அவகாசமோ உபதேசமோ இல்லாத சாமானிய மக்களும் மேற்படி "நித்யாதேவிகளை" 9 வாரம் தொடர்ந்து பிரதிட்சிணம் செய்து வழிபட்டு நாடிய பலனை எளிதில் அடையலாம்.

(ஸ்ரீவித்யா உபாசகர்களுக்கு மட்டும்)

**(அப்பிரதக்ஷிண வரிசையில்)**

1. காமேஸ்வரி
2. பகமாலினி
3. நித்யக்லின்னா
4. பேருண்டா
5. வஹ்னி வாசினி
6. மஹாவஜ்ரேஸ்வரி
7. சிவதூதி
8. த்வரிதா
9. குலசுந்தரி
10. நித்யா
11. நீலபதாகா
12. விஜயா
13. ஸர்வமங்களா
14. ஜ்வாலாமாலினி
15. சித்ரா
16. மஹாநித்யா

என்றும் விளங்குவர். கால ரூபணிகளாக விளங்கும் ஸ்ரீ நித்யாதேவிகளை அந்தந்த குறிப்பிட்ட திதிகளிலே வணங்கிப் பூஜை செய்தால் மிகச் சிறந்த பலனைத் தரும். நித்யாதேவிகளின் ஆராதனை பிரதமை முதல் பௌர்ணமி வரை அப்பிரதக்ஷிணமாகவும். திரும்பவும் அடுத்தப் ப்ரதமை முதல் அமாவாசை வரை பிரதக்ஷிணமாகவும் பூஜிக்க வேண்டும்.

## (ஸ்ரீ வித்யா உபாசகர்களுக்கு மட்டும்)

ஆ) நித்யாதேவிகளும் சுக்லபட்ச கிருஷ்ணபட்ச ஆராதனைக் கிரமமும்

| | நித்யாதேவி | வளர்பிறை | தேய்பிறை |
|---|---|---|---|
| 1. | காமேஸ்வரி | பிரதமை | அமாவாஸ்யை |
| 2. | பகமாலினி | த்விதியை | சதுர்த்தசி |
| 3. | நித்யக்லின்னா | த்ருதியை | திரயோதசி |
| 4. | பேருண்டா | சதுர்த்தி | துவாதசி |
| 5. | வன்ஹிவாசினி | பஞ்சமி | ஏகாதசி |
| 6. | மஹாவஜ்ரேஸ்வரி | ஷஷ்டி | தசமி |
| 7. | சிவதூதி | ஸப்தமி | நவமி |
| 8. | த்வரிதா | அஷ்டமி | அஷ்டமி |
| 9. | குலசுந்தரி | நவமி | ஸப்தமி |
| 10. | நித்யா | தசமி | ஷஷ்டி |
| 11. | நீலபதாகா | ஏகாதசி | பஞ்சமி |
| 12. | விஜயா | த்வாதசி | சதுர்த்தி |
| 13. | ஸர்வமங்களா | த்ரயோதசி | த்ருதியை |
| 14. | ஜ்வாலா மாலினி | சதுர்த்தசி | த்விதியை |
| 15. | சித்ரா | பௌர்ணமி | ப்ரதமை |

16. மஹா நித்யா (மகாதிரிபுரசுந்தரி) 16. கலைகளுடன் எப்போதும் பிந்துவில் பிரகாசிக்கும் தேவி.

**இ) திதி நித்யா தேவிகள் மற்றும் சியாமளா, வாராஹி வழிபாடும் பலனும் :**

# 1. ஸ்ரீ காமேஸ்வரி

**தியானம் :**

பாசம், கரும்புலில், மதுநிறைந்த பாத்திரம், மஹாங்குசம், புஷ்பபாணம், வரதஹஸ்தம் இவைகளைத் தரித்திருப்பவளும், சிவப்பு நிறமும், மூன்று கண்களை உடையவளாய், சிரசில் சந்திர கலையுடன் விளங்கும் அன்னை ஸ்ரீ காமேஸ்வரி தேவியை வணங்குகிறேன்.

**மந்திரம் :**

ஓம் காமேஸ்வர்யை வித்மஹே /நித்யக்லின்னாயை தீமஹி/ தன்னோ நித்யா ப்ரசோதயாத்//

**வழிபடு பலன்:**

ஸ்ரீ காமேஸ்வரி - ஆனந்தத்தைக் கொடுக்கக்கூடியவள்; தனத்தை தரக்கூடியவள்; வாழ்க்கையில் ஆனந்தத்தையும் சந்துஷ்டியையும் (மனநிறைவு) தாம்பத்திய அன்னி யோன்னியத்தையும், முக்தியையும் கொடுக்கக்கூடிய சக்தியாகும்.

# 2. ஸ்ரீ பகமாலினி

**தியானம்:**

ஆறு கரங்களிலும் செங்கழுநீர் புஷ்பம், தாமரை மலர், பாசம், அங்குசம், வில், புஷ்பபாணம் ஆகியவற்றை ஏந்தியவளாய், செம்பருத்தியைப் போன்ற சிவந்த நிறமும், முக்கண்ணும் உடையவளாய் அழகுள்ளவளாய் புன்சிரிப்பு கமழ தாமரை மலரில் வீற்றிருக்கும் ஸ்ரீ பகமாலினி தேவியைப் பூஜிக்கிறேன்.

**மந்திரம் :**

ஓம் பகமாலின்யை வித்மஹே/ஸர்வ வசங்கர்யை தீமஹி/ தன்னோ நித்யா ப்ரசோதயாத்//

வழிபடு பலன்:

ஸ்ரீ பகமாலினி என்கிற நித்யா தேவியை வணங்குபவர்க்கு சர்வ ஜன வசியம் கைகூடும்: விரோதிகளும் அடிபணிந்து ஏவல் கேட்பர். கர்ப்பத்திலுள்ள சிசுவைக் காத்து கருச்சிதைவு ஏற்படாமல் காக்கிற கருணையுள்ளம் படைத்தவள். பூஜிப்பவர்களுக்கு வெற்றியைத் தருபவள்.

## 3. ஸ்ரீநித்யக்லின்னா தேவி

தியானம் :

உதிக்கும் சூரியன், அருணன் இவர்களின் கிரணங்களைப் போன்ற தேக காந்தி உடையவளும் மூன்று, கண்களை உடையவளாய், சந்திர கலையை சிரசில் தரித்தவளாய், ரத்தினாபரணங்கள் பிரகாசிக்கும் அங்கங்களை உடையவளாயும், பாசம், அங்குசம், அபயம், பாநபாத்திரம் ஆகியவற்றை நான்கு கரங்களில் தரித்தவளாய், தாமரையின் மத்தியில்சிவப்பு நிறத்தோடு, செம்மாந்து அமர்ந்திருக்கும் ஸ்ரீ நித்யக்லின்னா தேவியைப் பரவுகிறேன்.

மந்திரம் :

ஓம் நித்யக்லின்னாயை வித்மஹே/ நித்ய மத்திரவாயைதீமஹி/

தன்னோ நித்யா ப்ரசோதயாத்//

வழிபடு பலன்:

ஸ்திரீகள், தமது கணவன்மார்களை நன்கு அன்புகாட்டி, புத்தி, சரீரம், சேவை இவைகளினால் சுகம் கொடுத்துப் போஷிப்பார்கள். இந்த தேவியை பூஜிப்பவர்களுக்கு குடும்ப ஒற்றுமை, பெற்றோரிடம் - புதல்வரின் ப்ரஸ்பர அன்பு, இவை சித்தியாகும்.

## 4. ஸ்ரீ பேருண்டா

**தியானம் :**

முத்து, முல்லை, சந்திரன் இவைகளைப்போல் வெண்மை நிறமுடையவளும், ரத்னங்களாலான தோடணிந்தவளும், ஜபமாலை, தாமரை புஷ்பம், சங்கு, அபயஹஸ்தம் தரும் கரங்களையுடையவளாய், சந்திரனைத் தரித்தவளாய், குன்றிமணி மாலை பொருந்திடும் மார்புடன், அவிழ்ந்த கூந்தலும், அழகிய முகம் உடையவளும், மூன்றுலகத்திற்கும் நாயகியை, பூஜா காலத்தில் அமர்ந்தும், மற்ற காலங்களில் நின்று கொண்டும் காட்சித்தரும்' ஸ்ரீ பேருண்டா தேவியைப் பூஜிக்கிறேன்.

**மந்திரம் :**

ஓம் பேருண்டாயை வித்மஹே / விஷஹராயை தீமஹி / தன்னோ நித்யா ப்ரசோதயாத்//

**வழிபடு பலன் :**

பேருண்டா தேவி - தேக சுகத்தைத் தந்து பக்தர்களின் விருப்பத்தை நிறைவேற்றி வைப்பவள். எப்படிப்பட்ட கொடிய விஷம் சாப்பிட்டிருந்தாலும் அதன் சக்தி, வீரியம், ஆகியவற்றை முறித்து, மனிதரை உயிராபத்திலிருந்து காப்பாற்றுபவள்.

## 5. ஸ்ரீ வஹ்னி வாசினி

**தியானம் :**

இடது கைகளில் தாமரை மலர், சங்கு, கரும்புவில், அமிருதம் இவைகளையும், வலது கையில் செங்கழுநீர் மலர், தங்கக்கொம்பு, புஷ்பபாணம், மாதுளம் பழம் இவைகளைத் தரித்தவளும், குகையிலிருக்கும் தங்கத்தைப்போன்ற நிறமுடையவளும், ரத்தினங்கள் பதித்த மகுடமுடையவளும், 8 கைகளும் மூன்று

கண்களுடையவளும், நித்யா என்கிற பெயருடையவளுமான ஸ்ரீ வஹ்னி வாசினி தேவியின் பாதார விந்தங்களைத் தியானிக்கிறேன்.

**மந்திரம் :**

ஓம் வஹ்னி வாசின்யை வித்மஹே / ஸித்திப்ரதாயை தீமஹி. தன்னோ நித்யா ப்ரசோதயாத்//

**வழிபடு பலன் :**

வணங்குவோருக்கு நோயின் நலிவு போக்கி தேச காந்தியும் தேஜஸையும் நல்குவதோடு, சகல சித்திகளையும் தந்து, மூன்று லோகத்திலும் நிகரில்லாதவர் என ஆக்கி வைக்கும் திறமுடையவள்.

## 6. ஸ்ரீ மஹா வஜ்ரேஸ்வரி

**தியானம் :**

ரக்த சமுத்திரத்தில், ஓடத்தில், நவரத்தினங்களுடன் ப்ரகாசிக்கும்பத்மாசனத்தில் வீற்றிருப்பவளும், பாசம், கரும்புவில், அங்குசம், மாதுளம் பழம், இவைகளைக் கைகளில் ஏந்தியவளாய், சிவந்த நிறமுடன் முக்கண்களுடன் விளங்கி, தேவர், முனிவர் வணங்கும் பவானி மாதாவான ஸ்ரீ வஜ்ரேஸ்வரியை மனதால் பூஜித்துப் பணிகிறேன்.

**மந்திரம் :**

ஓம் மகா வஜ்ரேஸ்வர்யை வித்மஹே/ வஜ்ரநித்யாவை தீமஹி/ தன்னோ நித்யா ப்ரசோதயாத்//

**வழிபடு பலன் :**

மகா வஜ்ரேஸ்வரி தேவியை வணங்குவோரின் சகல துன்பங்களையும் போக்கி இன்பம் தருபவள். மாந்தர் படும் அனைத்து துக்கங்களையும் நிவர்த்தி செய்யும் துக்கநாசினியே மஹா வஜ்ரேஸ்வரி மாதாவாகும்.

# 7. ஸ்ரீ சிவதூதி

**தியானம் :**

இடது பக்கம் கீழ்க்கரங்களில் ரத்னபாத்திரமும், அதற்கு மேலேயுள்ள கரங்களில் கதை, கேடயம், பாசம், இவைகளையும், வலது பக்கம், கீழ்க்கரங்களில் - தாமரை மலரும், கோடாலியும், அதற்கு மேலேயுள்ள கரங்களில் பட்டாக்கத்தியும், பாசமும் தரித்தவளாயும், நடுப்பகல் சூரியனைப் போல் ஒளி பொருந்தியவளாய், நவரத்தினமயமான ஆபரணங்களினால் ஜ்வலிப்பவளாய், 8 கரங்களையும், 3 கண்களையும்-உடையவளாய், தேவர் முனிவர்களால் துதிக்கப்பெறும், சிவதூதி என்னும் செவ்விய நித்தியாதேவியை மனமொழி மெய்களால் வணங்குகிறேன்.

**மந்திரம் :**

ஓம் சிவதூத்யை வித்மஹே / சிவங்கர்யை தீமஹி /

தன்னோ நித்யா ப்ரசோதயாத் //

**வழிபடு பலன் :**

ஸ்ரீ சிவதூதி அநீதியையும், அதர்மத்தையும் அழிப்பவள்; விரும்பியவைகளில், நியாயமானதை நிறைவேற்றி வைப்பவள்; செல்வம்முதல் சகல ஐஸ்வர்யங்களையும் சித்திகளையும் தந்து, சாதகனை, ஆபத்துக்களிலிருந்தும் காத்து ரக்ஷிப்பவள்.

# 8. ஸ்ரீ த்வரிதா

**தியானம் :**

எட்டு கொடிய நாகங்களை ஆபரணங்களாகத் தரித்தவளும், குன்றிமணி மாலை அணிந்தவளும், யௌவன மத்திய பருவத்தினளும், பாசம், அங்குசம், அபயம், வரதம் இவைகளைக் கரங்களில் வகிப்பவளும், மயில் தோகையைத் தலையில் சூட்டிக்

கொண்டிருப்பவளும், தளிர் மயமான வஸ்திரம் தரித்தவளும், மயில் தோகையிலான கொடி, குடை உடையவளும், கரடி, சிங்கம் இவைகளின் கூட்டத்துடன் பீடத்திலிருப்பவளும், சிறந்த அழகு உடையவளான ஸ்ரீ த்வரிதா தேவியை நமஸ்கரிக்கிறேன்.

**மந்திரம் :**

ஓம் த்வரிதாயை வித்மஹே / மகா நித்யாயை தீமஹி /

தன்னோ நித்யா ப்ரசோதயாத் //

**வழிபடு பலன் :**

தேககாந்தி, புகழ், கல்வி, செல்வம், ஆரோக்கியம், ஆயுள், ஆகிய அனைத்து சுகங்களும் தந்து லக்ஷ்மி கடாக்ஷமுடன் வாழ உதவுகிறவள். விஷ துக்கங்களையும் போக்கி க்ஷேமம் தரத்தக்கவள்.

## 9. ஸ்ரீ குலசுந்தரி

**தியானம் :**

செந்நிறமுடையவளாய், செந்தாமரையில் வீற்றிருப்பவளும், ஆறுமுகங்களும் பன்னிரு கரங்களும், ஒவ்வொரு முகத்திலும் முக்கண் விளங்குபவளாய் பாலசந்திரனை அணிந்தவளாய், 12 கரங்களில் (வலதில்) பவழமாலை, தாமரை, ரத்ன கமண்டலம், தனம் நிரம்பிய ரத்தினக் கிண்ணம், மாதுளம்பழம், ஞானமுத்திரையும், இடது கரங்களில் புஸ்தகம், செந்தாமரை, தங்க எழுத்தாணி, ரத்னமாலை, சங்கு வரதமுத்திரை இவைகளை உடையவளாய் விளங்கும் ஸ்ரீ குலசுந்தரியை வணங்குகிறேன்.

**மந்திரம் :**

ஓம் குலசுந்தர்யை வித்மஹே / காமேஸ்வர்யை தீமஹி /

தன்னோ நித்யா ப்ரசோதயாத் /

### வழிபடு பலன் :

குலசுந்தரி தேவியை, வாக்குசித்தி பெற - வெண்ணிறம் உள்ளவளாகவும், தனம், பொருள் அடைய - தங்கமேனி உள்ளவளாகவும், விரோதிகளை அடக்கிட - புகை வடிவினளாகவும், எதிரிகளைப் பணியச் செய்திட - கருநிறம் அல்லது நீல நிறமுள்ளவளாகவும் தியானிக்க வேண்டும். சிறந்த தற்காப்பு தரும் தேவி இவள்.

# 10. ஸ்ரீ நித்யா

### தியானம் :

உதயசூரிய பிம்பத்தைப் போன்ற நிறமும், ஆறுமுகங்களையும், 12 கரமும் உடையவளாய், இடப்பக்க கைகளில் பாசம், ஜெபமாலை, கரும்பு வில், கேடயம், சூலம், வரதம் இவைகளையும் வலப்பக்க கரங்களிலே அங்குசம், புஸ்தகம், புஷ்ப பாணம், கத்தி, கபாலம் அபயமுத்திரை உடையவளாய், தன்னுடைய பிரேரணையில் எல்லா ஜீவராசிகளையும் அவரவர் கர்மாவுக்கேற்றபடி ஆட்டி வைப்பவளாய், ஆபரணங்களினால் பிரகாசிப்பவளாய் ஒளிரும், ஸ்ரீநித்யா தேவியை நெஞ்சாரப் பணிகின்றேன்.

### மந்திரம் :

ஓம்நித்ய பைரவ்யை வித்மஹே/ நித்யா நித்யாயை தீமஹி

தன்னோ நித்யா ப்ரசோதயாத்.

### வழிபடு பலன் :

சாதகனுக்கு சரீர பலத்தைத் தந்து, ஆன்மீக மேம்பாட்டையும் விருத்தி செய்வதோடு, முயல்பவருக்கு அஷ்டமா சித்திகளையும் உவப்புடன் அருளுகின்ற ஒப்பற்ற சக்தியாகும்.

## 11. ஸ்ரீ நீலபதாகா

**தியானம் :**

இந்திர நீலக்கல் போன்ற நிறமுடையவளும். ஐந்து முகங்களும், ஒவ்வொரு முகத்திலும் மூன்று நேத்திரமும் உடையவளாய், 5 இடக் கரங்களில் பாசம், கொடி, தாமரைமலர், வில், வரதமுத்ரையும், 5 வலக்கரங்களில் அங்குசம், கத்தி, சக்தியாயுதம், பெரிய பாணம், அபயமுத்திரை இவைகளை உடையவளாய், முத்து, பவழ, ரத்னாபரணங்கள், தரித்தவளாய், தாமரையில் அமர்ந்திருப்பவளாய், பல சக்திகள் சூழ இருக்கும் ஸ்ரீ நீலபதாகா தேவியை இறைஞ்சுகிறேன்.

**மந்திரம் :**

ஓம் நீலபதாகாயை வித்மஹே / மகா நித்யாயை தீமஹி / தன்னோ நித்யா ப்ரசோதயாத்

**வழிபடு பலன் :**

தேர்வுகளில் வெற்றி பெறவும், கோர்ட்டு விஷயம் முதல் சகல காரியங்களிலும் ஜெயம் பெறவும், நீலபதாகை அருள் செய்வாள்.

## 12. ஸ்ரீ விஜயா

**தியானம் :**

உதயகால சூரியனைப் போல் ஒளி பொருந்தியவளும், ஐந்து முகங்கள் கொண்டவளும், ஒவ்வொரு முகமும் முக்கண் விளங்கிடவும், பத்துக் கரங்களில் சங்கு, சக்கரம், பாசம், அங்குசம், பெரிய கேடயம், பட்டாக் கத்தி, வில், அம்பு செங்கழுநீர் புஷ்பம், மாதுளம்பழம், ஆகியவற்றை தரித்தவளாய், கிரீடத்தில் சந்திர கலை ஒளிரவும், பீதாம்பரம் பளபளக்க, அநேக சக்திகளால் சூழப்பட்டு ஒளிரும் ஸ்ரீ விஜயா தேவியை வணங்குகிறேன்.

மந்திரம் :

ஓம் விஜயா தேவ்யை வித்மஹே / மஹா நித்யாயை தீமஹி /

தன்னோ நித்யா ப்ரசோதயாத் //

**வழிபடு பலன் :**

யுத்தத்தில் ஜெயமடைய, வாதத்தில் வெற்றி பெற, சகல ஐஸ்வர்யம், புகழ், இவைகளை அடைய உறுதுணையாவாள். ஜெயமடைய - பயங்கர ரூபிணியாகவும், நித்ய பூஜைக்கு - ஸௌம்யமூர்த்தியாகவும், ஸமரப்ரயோகத்திற்கு இவளை சிம்மத்தில் அமர்ந்தவளாகவும், சூழ்ந்த சக்திகளை வ்யாக்ராரூடர்களாயும் பூஜை செய்ய வேண்டும். இதரப் ப்ரயோகங்களுக்கு சுகாசனத்தில் வீற்றிருப்பவளாகவும், அவளுடைய இதர சக்திகளும் அவ்விதமே உள்ளபடியும் உபாசிக்க வேண்டும்.

# 13. ஸ்ரீ ஸர்வ மங்களா

**தியானம் :**

தங்க நிறமும், சந்திர சூரியர்களைக் கண்களாகக் கொண்டவளாய், மாணிக்க ஆபரணங்களினால் பிரகாசிப்பவளாய், 32, 16, 8 தளங்கள் கொண்ட பத்மாசனத்தில் வீற்றிருப்பவளாய், புன்சிரிப்பு மிளிர்பவளாய், வலது கரங்களில் மாதுளை அபயமுத்திரையும், இடக் கரங்களில் - தனம், வாதமுத்திரையும் கொண்டவளாய், சிரஸில் சிகப்புரத்ன மகுடம் தரித்தவளாய் சுவர்ணமயமாய் விளங்கும் ஸ்ரீ ஸர்வமங்களா தேவியைச் சேவிக்கிறேன்.

**மந்திரம் :**

ஓம் ஸ்வோம் ஓம் ஸர்வமங்களாயை வித்மஹே /
சந்த்திராத்மிகாயை தீமஹி /
தன்னோ நித்யா ப்ரசோதயாத் //

வழிபடு பலன் :

ஞானவிருத்தி, தன அபிவிருத்தி, எங்கும் எதிலும் வெற்றி பெற, ஆகாய ரயில் மார்க்கப்பிரயாணத்தில் விபத்தின்றிக் காத்திட, ஸர்வமங்களங்களையும் தரவல்ல - உயர் சக்தி இவள்.

# 14. ஸ்ரீ ஜ்வாலாமாலினி

தியானம் :

பிரளய கால அக்னியைப் போன்ற காந்தியும், புன்சிரிப்பு தவழும் ஆறுமுகங்களும் 12 கரங்களும், இடதுபக்க கரங்களில், பாசம், கத்தி, வில், கதை, சூலம், வரதமுத்திரை, வலப்பக்க கரங்களில் அங்குசம், கேடயம், பாணம், ஆமை, மழு, அபயமுத்திரையும், தரித்தவளாய், மூன்று கண்கள் உடையவளாய், விளங்கி நிற்கும் ஸ்ரீ ஜ்வாலாமாலினி தேவியை ஜெபிக்கிறேன்.

மந்திரம் :

ஓம் ஜ்வாலா மாலின்யை வித்மஹே / மஹா ஜ்வாலாயை தீமஹி / தன்னோ நித்யா ப்ரசோதயாத் //

வழிபடு பலன் :

ஜ்வாலா மாலினியை வழிபடுவோர்க்கு தனாகர்ஷணமும், சர்வ வசியமும், ஸ்த்ரீ புருஷ சேர்க்கையும், துக்க நாசனமும் சித்திக்கும், தாக்க வரும் தீமைகளும், விரோதங்களும் தீயென ஒழிந்து போகும்.

# 15. ஸ்ரீ சித்ரா

தியானம் :

பாலசூரியனைப் போன்ற காந்தி உடையவளாய், சந்திராலங்காரத்துடன் கூடிய முகசோபை கொண்டவளாய், பாசம்,

அங்குசம், வரதம், அபயமுத்திரைகளைத் தரித்தவளாய், பலவித வர்ணப் பட்டாடைகள் பூண்டவளாய், 3 கண்களை உடையவளாய்த் திகழும் ஸ்ரீ சித்தராம்பிகா தேவியை, சிந்தையில் பூஜிக்கிறேன்.

**மந்திரம் :**

ஓம் விசித்ராயை வித்மஹே / மஹா நித்யாயை தீமஹி /

தன்னோ நித்யா ப்ரசோதயாத் //

**வழிபடு பலன் :**

தன ஆகர்ஷணம், நிதிலாபங்கள், புதையல், போன்ற திடீர் சம்பத்துக்கள் அடையவும், ஸகலக்ஷேமத்தைப் பெறவும், சித்ராதேவி சித்தி தருகிறாள்.

## 16. ஸ்ரீ மஹா நித்யா

**தியானம் :**

ஏகம் ஆகவும், தனக்கு மேலொருவர் இல்லாதவளாகவும், இரண்டற்றவளும், ஜோதி ரூபமானவளும், அவ்யாஜ கருணாமூர்த்தியாக விளங்கும் ஸ்ரீ லலிதா பரமேஸ்வரியாய், பாசம், அங்குசம், கரும்புவில், புஷ்பபாணம் இவைகளைக் கரத்தில் தரித்து, 16 கலைகளுடன் கூடி எப்போதும் பிந்துஸ்தானத்தில் ப்ரகாசிப்பவளாய், ஸ்ரீ மஹாதிரிபுரசுந்தரி என்ற பெயருடன் விளங்குபவளும், தன்னைச் சுற்றிலும், 15 நித்யாதேவிகளால் எப்போதும் சூழப்பட்டு விளங்கும் மஹா நித்யா தேவியை மனமொழி மெய்களால் சிந்தித்து அடிபணிகிறேன்.

**மந்திரம் :**

ஓம் ஸ்ரீ ம் ஹ்ரீம் க்ளீம் ஐம்ஸௌ ஓம் ஹ்ரீம் ஸ்ரீம்
கஏஈ லஹ்ரீம்/ ஹஸகஹலஹ்ரீம் /ஸகலஹ் ரீம்/
ஸௌ : ஐம் க்ளீம் ஹ்ரீம் ஸ்ரீம் ஓம்/



**வழிபடு பலன் :**

ஸகல போக போத்யங்களையும் இகத்தில் தருவதோடு, முக்திப்ரதாயினியாகவும் விளங்கி அருளும் சக்தியே, ஸ்ரீ மஹா நித்யாதேவியாகும். இவளை வழிபட்டு, அடையாத பொருள் எதுவும், எங்கும், உலகில் இதுவரை படைக்கப்படவில்லை. ஸர்வ சௌக்யத்தையும், ஸந்துஷ்டியையும் க்ஷேமத்தையும் தந்து மக்களை காத்து ரட்சிக்கும் கருணைத் தெய்வமே - ஸ்ரீ லலிதா பரமேஸ்வரி தேவி.

## 17. ஸ்ரீ மஹா வாராஹி (பகளாமுகி)

**தியானம் :**

பஞ்சமி, தண்டனி, தண்டநாதை ஆகிய பல பெயர்களை உடையவளாய், ஸ்ரீ லலிதா திரிபுரசுந்தரியின் படைத்தளபதியாய் விளங்குபவளும், மஞ்சள் நிறத்தில் ஆடையும், ஆபரணமும் அணிந்தவளாய், வலம்புரி சங்க, சக்கரம், கேடயம், கத்தி, தண்டாயுதம், ஆகியவற்றை கைகளில் தரித்தவளாய், காட்டுப் பன்றிகளால் இழுக்கப்பட்டு ஐந்து தட்டு கொண்ட தேரில் வருபவளாய், வலிமை மிக்க உடல் கொண்டவளாய்ப் பவனிவரும் மஹா வாராஹி தேவியை மனதால் நினைத்து வணங்குகிறேன்.

**மந்திரம் :**

ஓம் வாராஹ்யை வித்மஹே / ரத்னேஸ்வர்யை தீமஹி /

தன்னோ தேவி ப்ரசோதயாத் //

**வழிபடு பலன் :**

மஞ்சள் நிற ஆடையணிந்து மஞ்சள் நிற மணிமாலையைக் கொண்டு ஸ்ரீ வாராஹியை ஜெபிக்க வேண்டும். சதாசிவனின் அனுக்கிர சக்தியே - வாராஹி தேவி, இடி, மின்னல், பூகம்பம் விபத்து ஆகியவற்றிலிருந்து காக்கிறவள்; பாம்பு, தேள், துஷ்ட

மிருகங்கள் மூலம் ஏற்படும் இன்னலைப் போக்குபவள்; விரோதிகளை நாசமாக்குபவள் - ஞானத்தை தருபவள்; ஸ்ரீவாராஹிதேவி வழிபடுபவருக்கு தற்காப்பாக விளங்கி, எல்லா நன்மைகளும் தருவதில் நிகரற்றவள்.

# 18. ஸ்ரீ சியாமளா (ராஜமாதங்கி)

**தியானம் :**

ரத்தினமயமான ஆசனத்திலமர்ந்து ஒரு காலைத் தாமரையில் வைத்திருப்பவளும், பச்சை நிறமுடையவளும், அழகிய புள்ளிகளுடன் கூடிய சிவப்பு நிறமான ஆடை அணிந்தவளும், சந்திரனை சிரசில் தரித்தவளாய், வீணையைக் கரங்களில் வைத்து வாசிப்பவளும், மாசற்ற நீலோத்பல மொட்டைக் காதில் அணிந்தவளாய், செங்கழுநீர் புஷ்பமாலை அணிந்தவளான மஹா சியாமளா தேவியை வந்திக்கிறேன்.

**மந்திரம் :**

ஓம் மாதங்கின்யை வித்மஹே / ரத்னேஸ்வர்யை தீமஹி

தன்னோ தேவி ப்ரசோதயாத் //

**வழிபடு பலன் :**

ஸ்ரீ லலிதா பரமேஸ்வரியின பிரதான மந்திரியாகையினால் மந்திரிணி எனப் பெயர்பெறம் சியாமளா; இவளே வாக்தேவி, புத்திக்கு அதிபதி, இவளை வழிபடுபவருக்கு உலகிலுள்ள எல்லா ஞானங்களும் சித்தியாகின்றன. உலகியலின்பத்திலேயே பேரின்பத்தைக் கண்டு, அதன்மூலம் ஆன்மாவை ஆன்மீக நெறிக்கு உயர்த்தும் சக்தி படைத்தவள் - சியாமளா தேவி. கல்வி, நுண்கலைகள், இசை ஆகிய அனைத்திலும் எளிதில் தேர்ச்சி பெற இவளை வழிபடுதல் அவசியம்.

இதுவரை விளக்கமாகக் கூறபபட்டுள்ள ஸ்ரீ நித்யா தேவிகளின் சன்னிதியைத் தொடர்ந்து வலம் வந்து வழிபட்டுப் பயன் பெறுவதோடு, தனது விருப்பத்திற்குரிய தெயவத்தின் மந்திரத்தைத் தியானம் செய்து அருள்பெற விரும்புவோருக்கு ஸ்ரீ மாமேரு தியான நிலையத்தில் அமைந்துள்ள தியான மண்டபம், மிக ஏற்றதாகும். நகர்ப்புறத்துச் சந்தடிகள் எதுவுமில்லாமல், அமைதியாக அமர்ந்து கொண்டு தியானம் செய்ய எண்ணும் பக்தர்களை இருகரம் கூப்பி ஸ்ரீமாமேரு தியான நிலையத்திற்கு வருக வருக என அழைக்கிறோம்.



# ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம்
# ஓம்-ஐம்-ஹ்ரீம்-ஸ்ரீம்

ஒவ்வொரு நாமாவளியும் நம: என்று முடிக்கவேண்டும்

1. ஓம் ஸ்ரீமாத்ரே நம :
2. ஓம் ஸ்ரீமஹாராஜ்ஞ்யை
3. ஸ்ரீமத்-ஸிம்ஹாஸனேச்வர்யை
4. சிதக்னிகுண்ட - ஸம்பூதாயை
5. தேவகார்ய-ஸமுத்யதாயை
6. உத்யத்பானு - ஸஹஸ்ராபாயை
7. சதுர்பாஹு-ஸமன்விதாயை
8. ராகஸ்வரூப-பாசாட்யாயை
9. க்ரோதாகாராங்குசோஜ்ஜ்வலாயை
10. மனோரூபேக்ஷு-கோதண்டாயை
11. பஞ்சதன்மாத்ர-ஸாயகாயை
12. நிஜாருண-ப்ரபா-பூர-மஜ்ஜத்-ப்ரஹ்மாண்ட-மண்டலாயை
13. சம்பகாசோக - புந்நாக -ஸௌகந்திக-லஸத்-கசாயை
14. குருவிந்த-மணிச்ரேணீ-கநத்-கோடீர-மண்டி தாயை
15. அஷ்டமீசந்த்ர-விப்ராஜ-தலிக-ஸ்தல-சோபி தாயை
16. முகசந்த்ர-கலங்காப-ம்ருகநாபி-விசேஷ காயை
17. வதனஸ்மர-மாங்கல்ய-க்ருஹ-தோரண-சில்லிகாயை
18. வக்த்ர-லக்ஷ்மி-பரீவாஹ-சலன்-மீனாப-லோசனாயை
19. நவசம்பக புஷ்பாப-நாஸாதண்ட-விராஜி தாயை
20. தாராகாந்தி-திரஸ்காரி-நாஸாபரண-பாஸுராயை
21. கதம்ப-மஞ்ஜரி-க்லுப்த-கர்ணபூர-மனோஹ ராயை
22. தாடங்க-யுகளீ-பூத-தபனோடுப-மண்டலாயை
23. பத்மராக-சிலாதர்ச-பரிபாவி-கபோல-புவே
24. நவவித்ரும-பிம்பஸ்ரீ-ந்யக்காரி-ரதனச்சதாயை
25. சுத்த-வித்யாங்குராகார-த்விஜபங்க்தி-த்வயோ ஜ்ஜ்வலாயை
26. கர்ப்பூரவீடிகாமோத-ஸமாகர்ஷி-திகந்த ராயை
27. நிஜ-ஸல்லாப-மாதுர்ய-விநிர்ப்பர்த்ஸித-கச்சப்யை

28. மந்தஸ்மித-ப்ரபாபூர-மஜ்ஜத்காமேச-மான ஸாயை
29. அநாகலித-ஸாத்ருச்ய-சிபுக-ஸ்ரீ-விராஜிதாயை
30. காமேச-பத்த-மாங்கல்ய-ஸூத்ர-சோபித-கந்தராயை
31. கநகாங்கத-கேயூர-கமனீய-புஜான்விதாயை
32. ரத்ன-க்ரைவேய சிந்தாக-லோல-முக்தா-பலான்விதாயை
33. காமேச்வர-ப்ரேமரத்ன-மணிப்ரதிபண-ஸ்தன்யை
34. நாப்யாலவால-ரோமாலி-லதாபலகுசத்வாய்யை
35. லக்ஷ்ய-ரோம-லதா தாரதா-ஸமுன்னேய-மத்ய மாயை
36. ஸ்தன-பார-தலன்-மத்ய-பட்ட-பந்த-வலித்ரயாயை
37. அருணாருணா-கௌஸும்ப - வஸ்த்ர-பாஸ்வத்-கடீதட்யை
38. ரத்ன-கிங்கிணிகா-ரம்ய-ரசனா-தாம-பூஷி தாயை
39.காமேச-ஜ்ஞாத-ஸௌபாக்ய-மார்த்தவோரு-த்வயான்விதாயை
40. மாணிக்ய-முகுடாகார-ஜானுத்வய-விராஜிதாயை
41. இந்த்ரகோப-பரிக்ஷிப்த-ஸ்மரதூணாப-ஜங்கி காயை
42. கூட - குல்பாயை
43. கூர்ம-ப்ருஷ்ட-ஜயிஷ்ணு-ப்ரபதான்விதாயை
44. நகதீதிதி-ஸஞ்சன்ன-நமஜ்ஜன - தமோ குணாயை
45. பத-த்வய-ப்ரபா-ஜால-பராக்ருத-ஸரோரு ஹாயை
46. ஸிஞ்ஜான - மணி - மஞ்ஜீர - மண்டித - ஸ்ரீபதாம் புஜாயை
47. மராலீ-மந்த-கமனாயை
48. மஹா-லாவண்ய-சேவதயே
49. ஸர்வாருணாயை
50. அநவத்யாங்க்யை
51. ஸர்வாபரண-பூஷிதாயை
52. சிவ-காமேச்வராங்கஸ்தாயை
53. சிவாயை
54. ஸ்வாதீன-வல்லபாயை
55. ஸுமேரு-மத்ய-ச்ருங்கஸ்தாயை
56. ஸ்ரீமந்நகர-நாயிகாயை
57. சிந்தாமணி-க்ருஹாந்தஸ்தாயை
58. பஞ்ச-ப்ரஹ்மாஸன-ஸ்திதாயை
59. மஹாபத்மாடவீ-ஸம்ஸ்தாயை
60. கதம்பவந-வாஸின்ய

61. ஸுதா-ஸாகர-மத்யஸ்தாயை
62. காமாக்ஷ்யை
63. காமதாயின்யை
64. தேவர்ஷி-கண-ஸங்காத-ஸ்தூயமானாத்ம-வைபவாயை
65. பண்டாஸுர-வதோத்யுக்த-சக்தி-ஸேனா-ஸமன் விதாயை
66. ஸம்பத்கரீ-ஸமாரூட-ஸிந்துர - வ்ரஜ - ஸேவி தாயை
67. அச்வாரூடாதிஷ்டிதாச்வ - கோடிகோடிபி ராவ்ருதாயை
68. சக்ரராஜ-ரதாரூட-ஸர்வாயுத-பரிஷ்க்ருதாயை
69. கேயசக்ர-ரதாரூட-மந்த்ரிணீ-பரிஸேவிதாயை
70. கிரிசக்ர - ரதாரூட-தண்ட-நாதா-புரஸ்க்ரு தாயை
71. ஜ்வாலாமாலினிகாக்ஷிப்த - வஹ்நிப்ராகார - மத்யகாயை
72. பண்டஸைன்ய - வதோத்யுக்த - சக்திவிக்ரம - ஹர்ஷிதாயை
73. நித்யா - பராக்ரமாடோப - நிரீக்ஷண-ஸமுத்ஸு காயை
74. பண்டபுத்ர - வதோத்யுக்த - பாலா - விக்ரம - நந்தி தாயை
75. மந்த்ரிண்யம்பா - விரசித - விஷங்கவத - தோஷி தாயை
76. விசுக்ர - ப்ராணஹரண - வாராஹீ - வீர்ய - நந்தி தாயை
77. காமேச்வர - முகாலோக - கல்பித - ஸ்ரீகணேச்வ ராயை
78. மஹாகணேச - நிர்ப்பின்ன - விக்னயந்த்ர - ப்ரஹர்ஷிதாயை
79. பண்டாஸுரேந்த்ர-நிர்முக்த-சஸ்த்ர-ப்ரத்யஸ்-த்ரவர்ஷிண்யை
80. கரங்குலி-நகோத்பன்ன-நாராயண - தசாக்ருத்யை
81. மஹா-பாசுபதாஸ்த்ராக்னி - நிர்தக்தாஸுர ஸைனிகாயை
82. காமேச்வாராஸ்த்ர - நிர்தக்த - ஸபண்டாஸுர - சூன்யகாயை
83. ப்ரஹ்மோபேந்த்ர - மஹேந்த்ராதி - தேவஸம்ஸ்துத - வைபவாயை
84. ஹரநேத்ராக்னி-ஹந்தக்த-காமஸஞ்ஜீவ-னௌஷத்யை
85. ஸ்ரீமத்வாக்பவ-கூடைக-ஸ்வரூபமுக-பங்க ஜாயை
86. கண்டாத : - கடிபர்யந்த-மத்ய-கூட-ஸ்வ ரூபிண்யை
87. சக்தி-கூடைகதாபன்ன-கட்யதோபாக-தாரிண்யை
88. மூலமந்த்ராத்மிகாயை
89. மூலகூடத்ரய-கலேபராயை

90. குலாம்ருதைக-ரஸிகாயை
91. குலஸங்கேத-பாலின்யை
92. குலாங்கனாயை
93. குலாநதஸ்தாயை
94. கௌலின்யை
95. குலயோகின்யை
96. அகுலாயை
97. ஸமயாந்தஸ்தாயை
98. ஸமயாசார-தத்பராயை
99. மூலதாரைக-நிலயாயை
100. ப்ரஹ்மக்ரந்தி-விபேதின்யை
101. மணிபூராந்த-ருதிதாயை
102. விஷ்ணுக்ரந்தி-விபேதின்யை
103. ஆஜ்ஞாசக்ராந்தராலஸ்தாயை
104. ருத்ரக்ரந்தி-விபேதின்யை
105. ஸஹஸ்ராராம்புஜாரூடாயை
106. ஸுதாஸாராபி-வர்ஷிண்யை
107. தடில்லதா-ஸமருச்யை
108. ஷட்சக்ரோபரி-ஸம் ஸ்திதாயை
109. மஹாஸக்த்யை
110. குண்டலின்யை
111. பிஸதந்து - தநீயஸ்யை
112. பவான்யை
113. பாவனாகம்யாயை
114. பவாரண்ய-குடாரிகா
115. பத்ரப்ரியாயை (யை
116. பத்ரமூர்த்யை
117. பக்த-ஸௌபாக்ய-தாயின்யை
118. பக்தி-ப்ரியாயை
119. பக்தி-கம்யாயை
120. பக்தி-வச்யாயை
121. பயாபஹாயை
122. சாம்பவ்யை
123. சாரதாராத்யாயை

